ஓம்.

No. 5. நெ. ரு.

# திருமங்கலிய தாரணவிதி.



ஸ்ரீ

திருவனந்தபுரம்

இந்துசுதர்மாசாரசபையின்

பரிபாலகரும்

சென்னை, இந்து டிராக்ட் சொஸைட்டியின்

கௌரவமெம்பருமான

பரிசுத்த விசிஷ்டாத்வைத பரமதகண்டனம்

கோயமுத்தூர்,

ம.சே.வேங்கடகிரிசாஸ்திரியாரவர்களால்

இயற்றப்பட்டது.

PUBLISHED BY

S. R. NAMASIVAYA CHETTIAR,

*Proprietor U. B. R Series &c.*

Madras.

PRINTED AT "THE MADRAS RIPON PRESS."

*316, Thambu Chetty Street.*

1888

Price 3 Pies ] [விலை பை மூன்று.

POSTAGE EXTRA.

# விசேஷ அறிவிப்பு.

## திருமங்கலியதாரணவிதி.

இதில் இந்துக்கள் அனைவரும் அத்தியாவசியம் கவ
கற்பாலனவாகிய அநேகவிஷயங்கள் வேதநூற் பிரமா
தோடு எழுதப்பட்டிருக்கின்றது.

**பிரதி 1 - க்கு விலை பை மூன்று.**

10 - க்குத் தபாற்கூலி அணா அரை.

ஒரேமுறையில் 10 - புத்தகங்கள் வாங்குவோர்க்கு
றும், 25 - க்கு 3ம்; 50 - க்கு 7ம்; 100 - க்கு 15ம்; 500
100ம்; கமீஷன் கொடுக்கப்படும்.

வேண்டுவோர் அடியிற்கையொப்பமிட்டவரிடம் பணம் அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

| | |
|---|---|
| மதராஸ் | இங்ஙனம், |
| ரிப்பன்பிரெஸ், | சை. ர. நமசிவாயசெட்டி |
| 316, தம்புசெட்டிவீதி | *Proprietor U. B. R. Series &* |

# NOW READY FOR SALE.

## மனமோகனராஜன் சரித்திரம்.

பிரதி 1 - க்கு அணா ஒன்று.

தபாற்கூலி 4 - க்கு அணா அரை.

---

## ஞானரத்நாவளி.

பிரதி காப்பி க-க்கு அணா ஒன்று.

தபாற்கூலி அணா அரை.

இதில் இந்துமத உண்மைகள் செவ்வனே விளக்கப்ப
ருக்கின்றன.

துவது, லோகோபகாரமும், சகோதரமைத்திரதருமமும் ஆ
நமாகையால், அவ்வாறு அநுஷ்டித்துவரும் அநாசாரங்களில்
ன்ருகிய, சுவர்ணக்கொடியில் திருமங்கிலியங்கோர்த்துத்தரி
கும் அநாசாரத்தை இங்கு எடுத்துக்காட்டிக்கண்டித்து, சப்
மாணங்களோடுகூடிய சதாசாரத்தை ஸ்தாபிக்கத்துணிந்
தன். சகலரும் உண்மையையறிந்து ஆசரிக்கப்பிரார்த்திக்
ன்றேன்.

பிரமாணமின்றி எதுவுங்கொளற்பாலதன்று. ஆகவே,
ம்மவர்கள் அனுஷ்டிக்கும் சகலதர்மங்களுக்கும் பிரமாண
ரந்தங்களின்னவையென்பதை முதலில் நிர்ணயிக்கவேண்
யது ஆவசியகம்.

பராசரமாதவீயத்தில் - கஉ - வது வசனம்.

ப்ரஜ்ஞாஸோ நாநாம் ப்ரமாணம் பரமம் ச்ருதி:।
த்விதீயம் தர்மசாஸ்த்ரம் து த்ருதீயம் லோகஸங்க்ரஹ:॥

(பொருள்) தர்மத்தை அறிய இஷ்டமுள்ளவர்களுக்கு முதலாவது வேதமும், இரண்டாவது தர்மசாஸ்திரமும், மூன்ருவது சிஷ்டாசாரமுமென நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன.

காளூதர் - க - கOஎ.

வேதோக்தஸ்ஸர்வதர்மஸ் ஸ்யாத் ஸ்ம்ருத்யுக்தோ
ப்யயம் । ஶிஷ்டாசாரஶ்ச ஶிஷ்டாநாம் த்ரிவிதம் தர்ம
லக்ஷணம்॥

பரஸ்மைபிர்மணேநம:.

# திருமங்கலியதாரணவி

## உபோத்காதம்.

புண்ணிய பூமியாகிய பாரதகண்டத்தில் வசிக்கும் சகோதரர்களே!

அநாதி பகவானாகிய பரமேசுவரனால் அருளிச்செ பட்ட வேதசாஸ்திரங்களால் பிரதிபாதிக்கப்படும் இ த்தை நம்முன்னோர்களாகிய ஆரியர்களும், அவர்க பின் சந்ததியாகிய நாமும் சுருதியுத்தி அநுபவங்களால் ந்து பயபக்திவிசுவாசத்தோடு ஆதரித்துவருகிறோம். யிருக்க இற்றைகருச்சுமார் ஆறாயிரம்வருஷங்களாக மாய் மனிதர்களாலுண்டாக்கப்பட்ட பல புனசமயங்க யவும், அதை ஆதரித்துவந்த அரசர்களுடையவும் கெ யினால் நமது மதசாஸ்திரங்களைப்படிக்கவும், அதன்படி வும், நடத்தவும் நம்மவர்களுக்கு அனுகூலப்படாமற்டே று. போகவே, காலந்தோறும் இடையிடையே அநா கள்நுழைந்தன. சுவல்பகாலஞ்சென்றதன்மேல்அவைக மவர்களுக்குச் சிஷ்டாசாரம்போல் தோன்றும்படி ஆ டன. அப்படியே இப்பொழுதும் சிலதுராசாரங்கள்தே மிக விரைவாய்ப் படர்ந்துவருகின்றன. அவைகளை உ குடனே பிரஸ்தாபித்துக்கண்டித்துச் சதாசாரங்களைநி

6124

(பொருள்) எல்லார்க்கும் தர்மங்களுடைய இலக்கணத்தைத் தெரிந்துகொள்ள முதலாவது வேதம், இரண்டாவது தர்மசாஸ்திரம், மூன்றாவது சிஷ்டாசாரமாகவிருக்கின்றன.

இந்துக்களுக்கு மதசாஸ்திரமாகிய பிரமாணகிரந்தங்கள் இன்னின்னவை என்பதற்கு இதுபோன்ற அநேகபிரமாணங்களுண்டென்றாலும், அவைகளை விஸ்தாரமாயெழுதாமல், இப்புத்தகம் சகலஜனங்களுக்குஞ்சரசவிலைக்குக்கிடைக்கும்பொருட்டும், எவ்விதத்தொழிலாளிகளும் சுலபமாய்த்தெரிந்துகொள்ளும்பொருட்டும்இதில் ஆங்காங்கு ஆவசியகமான பிரமாணங்கள் இரண்டு அல்லது மூன்றுக்குமேற்படாமல் காட்டிவரப்படும்.

சாஸ்திரங்களின்விதியை அநுசரித்து நம்மவர்கள் விவாககாலத்தில் வதுவின்கழுத்தில் வரனால் கட்டப்படுந் திருமங்கலியம் பருத்திநூலினாலுண்டாக்கப்பட்டகயிற்றிலேயே கோர்த்திருக்கவேண்டுமென்பதுநிச்சயமானதருமமாயிருக்க, சுமார் ஐந்தாறுவருஷங்களுக்கிப்பால் அநேகம்பேர் சுவர்ணக்கொடியில் ஷை திருமங்கிலியத்தைக் கோர்த்துக்கட்டும் வழக்கத்தையநுசரித்துவருகிறார்கள். அது அதிகஙே அநாசாரம். சிஷ்டாசாரத்தையாவது,வேதசாஸ்திரங்களையாவது, அல்லது இரண்டையுமாவது திடமாய்நம்பிநடக்கும் நம்மவர்கள் இப்படிப்பட்ட முக்கியமானவிஷயத்தில் அநாதரணியமாயுள்ள "தாந்தோணிமதத்தை" ஆசரித்துநடப்பது எவ்வளவுந்தகுதியல்ல.

வேதசாஸ்திரம், அல்லது பூர்வாசாரங்களைவிட்டு விபரீதமாய் நடக்கக்கூடாதென்பதற்குப் பிரமாணம்.

பாரதத்தில் பகவான வசனம்.

[illegible]

(பொருள்) சுருதியும், ஸ்மிருதியும் என்னுடைய ஆக்ஞைகளானபடியினாலே, அவைகளை எவன்மீறிநடக்கிறு அவன் என்னுடையபக்தனாயிருந்தபோதிலும் என்னுடைய உத்தரவைத்தள்ளி நடந்தவனுதலால், எனக்குத்துரோ வான்என்பதற்குச்சந்தேகமில்லை.

ஸ்மிருதி முக்தாபலத்தில் ஆங்கீரச வசனம்.

[illegible]

(பொருள்) குடுமி, திரியக்புண்டரம், அல்லது ஊ புண்டரம், பூணூல் அல்லது திருமங்கிலியச்சரடு, மதாச முதலிய இவைகள் தங்கள் தங்கள் பூர்வீகாள்நடந்தபிரகா நடக்கவேண்டும்; இல்லாவிடில் மகாபாபியாவான் எ ற்குச்சந்தேகமில்லை.

இவ்வசனங்களால் பூர்வாசாரத்தையாவது, சுருதிஸ்மி களையாவது இனையளவுந்தப்பி நடக்கக்கூடாதென். அப்படிநடக்கிறவன் தெய்வத்துரோகியும், பாபியுமாகிறு ன்றும் ஸ்பஷ்டமாய்ஏற்படுகிறபடியால், திருமங்கலியச்சூ ரம் பருத்திநூலாக இருந்ததைச் சுவர்ணக்கொடியாகமா

னது அதிகரே[illegible]மென்பது நிர்வாதமான விஷய யென்க.

விவாஹகாலத்தில் தரிக்குந்திருமங்கிலியமே சாஸ்திரவிதியாலேற்பட்டிராமல், கேவலம் ஏதோ ஓர்விதவழக்கமாத்திரமாயேற்பட்டுள்ளது என்று சிலராற் சொல்லப்படுகின்றது ஆகவே, முதன்முதல் அதனிருப்புக்கு விதிகாட்டி அதனை நிலைநிறுத்துவதைவிடுத்து, அம்மங்கிலியத்தைக் கோர்க்கும் சூத்திரத்தை சுவர்ணக்கொடியாக, மாற்றினது அநாசாரம் என்று வழக்கிடவந்ததுபொருந்தாது என்னில்,

சாஸ்திரவிரோதமாய்த் திருமங்கிலியத்தைச் சுவர்ணக்கொடியில் கோர்த்துக்கட்டத் தொடங்கியதுபோதாமல் திருமங்கலியதாரணத்தைச் சம்சயிப்பதுவுங்கூடவா! பளா! பளா!! நன்றாயிருக்கிறது !!! மந்திரவத்தாய் விவாகஞ்செய்யுமூரிலுங் குடியிருந்தறியீர்கள்போலும்! விவாககாலத்தில் வரன், வதுவின்கழுத்தில் திருமங்கலியதாரணம் செய்யும்போது சொல்லும்மந்திரத்தைக்கேளுங்கள்.

𑌮𑌾𑌙𑍍𑌗𑌲𑍍𑌯𑌂 𑌤𑌨𑍍𑌤𑍁𑌨𑌾𑌨𑍇𑌨 𑌮𑌮 𑌜𑍀𑌵𑌨𑌹𑍇𑌤𑍁𑌨𑌾।

𑌕𑌣𑍍𑌠𑍇 𑌬𑌧𑍍𑌨𑌾𑌮𑌿 𑌸𑍁𑌭𑌗𑍇 𑌸𑌂𑌜𑍀𑌵 𑌶𑌰𑌦𑌃 𑌶𑌤𑌮𑍍॥

(பொருள்) ஹேசுபகே! என்னுடையதீர்க்காயுசு நிமித்தமாயிருக்கிற இந்தத் திருமங்கலியத்தோடு கூடியிருக்கும் "தந்து"வை உன்கழுத்தில்கட்டுகிறேன்; நீ நூறுவருஷம் ஜீவித்திருப்பாயாக.

இந்தமந்திரத்தினாலும், கீழேஉதகரிக்கும் கோபிலஸ்மிருதி வசனத்தாலும் திருமங்கலியதாரணம் சாஸ்திரோக்தமென்பது நிர்வாதமாயேற்படும். உசநாதிசூத்திரங்களினும் விதித்திருப்பதைக் கண்டுகொள்க.

இம்மந்திரத்தில் தந்துஎன்னும் பதத்திற்குப்பருத்திநூலினாலேயே திருமங்கலியதாரணஞ்செய்யவேண்டுமென்று ஸ்பஷ்டமாயேற்படுகின்றது.

மேல்பிரமாணத்தில்வந்த " தந்து " என்னும்பதத்திற்குப் பருத்திநூலேதான் என்றுபொருள் ஏற்படுவதெப்படி? தந்துவென்பது பொதுப்பதமாய்நின்று சுவர்ணதந்து, பிசதந்து முதலான பலதந்துகளுக்கு மிடந்தரக்கூடுமாதலால் கார்ப்பாசதந்துவென்னும் பருத்திநூலொன்றையே குறிக்க அப்பதம் எழுந்ததென்று சாதிக்கமுடியாது; ஆகவே,சுவர்ணக்கொடியிலும் திருமங்கலியத்தைக்கோர்த்துக்கட்டத்தடையில்லை என்னில்,

"தந்து" என்னும்பதம் பருத்திநூலைக்குறிக்குமேயன்றி, சுவர்ணக்கொடிமுதலானவைகளைக்குறிக்கமாட்டாது. ஏனென்றால், அமரத்தில் "ஸூத்ராணி நரி தந்தவ:" எனப் பிரயோகமிருப்பதாலும் "தந்து" வென்னும் தனிப்பதத்தின் அர்த்தத்தை விசாரிக்குமிடத்து தநு தெவளெ த்ரு ஹிரிதி தந்தவ:(தநு விஸ்தாரெ) இதன்பொருள்; வஸ்திரம் விஸ்தரிக்கப் படுதல் என்று ஏற்படுவதாலும், "தந்து" வென்னும்பதம் பருத்திநூலைப்பொருளாகக்கொ

ண்டுகிற்குமேயன்றி மற்றெந்தவிதத்தாலும் விசேஷபதங்கள் சேர்ந்தாலன்றி வேறுநூற்களைப் பொருளாகக்கொள்ளமாட்டாது. மேலும், அமரத்தில் "தந்துவாயஃகுவிந்தஸ்யாத் துந்நவாயஸ்து ஸௌசிகஃ" என்னும்வசனத்தில் தந்துவாயன் என்பது சேணியன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியென்றால், "தந்தூந்வயதீதி தந்துவாயஃ" இதன்பொருள்; நூலெநெய்கிறவன் என்று ஏற்படுகின்றது. ஆகவே, தந்துவாயன் என்னும்பேர், பருத்தியினால் நூலுண்டாக்கி நெய்யுந்தொழிலாளியாகிய சேணியனைமாத்திரம் குறிக்கின்றதன்றி, சுவர்ணக்கொடி முதலானவைகளை உண்டாக்கும் தட்டான்முதலிய ஆட்களைக்குறிக்காது; தட்டான்முதலானவர்களுக்குத் தந்துவாயன் எனப் பெயருங்கிடையாது. ஆகையால் தந்துவென்னும்பதம் சுவர்ணதந்து, பிசதந்துமுதலானபொருளை ஒருபோதும் அர்த்தங்கொள்ளாதென வறிக.

திருமங்கிலியச்சரடு பருந்திநூலாகத்தா னிருக்கவேண்டுமென்று சாஸ்திரங்கள்விதிக்க யாதொருநியாயமுந்தோன்றவில்லை; ஆகையால் அதுவிஷயமான நியாயங்களைக்கண்டறிவது இச்சந்தர்ப்பத்திற்கு மிகவும் ஆவசியகமென்று கேட்கும் பக்ஷத்தில்,

க-வது. ஸ்திரீகளின் விவாகத்தை உபநயனஸ்தானமாக விதிக்கப் பட்டிருக்கின்றமையால், உபநயனஸ்தானத்திற்கு முக்கிய அடையாளமாகிய பூணூல் எப்படிபருத்திநூலிற்போடப்படுகின்றதோ, அப்படியே ஸ்திரீகளுக்குத்திருமங்கலியதா

ரணமும் பருத்திநூலாகவே இருக்கவேண்டுமென்பது சாஸ்திரங்களின் துணிபாம்.

ஸ்திரீகளுக்கு விவாகமே உபநயனஸ்தான மென்பதற்குப் பிரமாணம்.

மநு - ௨ - ௬௭.

வைவாஹிகோ விதி꞉ ஸ்த்ரீணாம் ஸம்ஸ்காரோ வைதிக꞉ ஸ்ம்ருத꞉ । பதிஸேவா குரௌ வாஸோ க்ருஹார்த்தோऽக்நிபரிக்ரியா ॥

(பொ-ள்.) ஸ்திரீகளுக்கு விவாஹத்தை உபநயநமாகவும், பர்த்தாவுக்குப் பணிவிடைசெய்வதைக் குருகுலத்தில் வேதமோதுவதாகவும், வீட்டைக் காப்பாற்றுவதைச் சமிதாதானமாகவும் சொல்லப்படுகின்றன.

வியாக்கிரபாதர், ௧ - ௫௨.

உபாயநோதித꞉ கால꞉ ஸ்த்ரீணாமுத்வாஹகர்மணி ।
ஸ்த்ரீணாமுபநயநஸ்தாநே விவாஹம் மநுரப்ரவீத் ॥

(பொ-ள்.) உபநயநத்துக்குச் சொல்லியிருக்கப்பட்ட காலமே ஸ்திரீகளுக்கு விவாகத்துக்குச் சொல்லியிருக்கின்றது. ஸ்திரீகளுக்கு விவாகமே உபநயனமாக மனுவினால் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீ

யம ஸ்மிருதி-உஎக.

விவாஹம் சோபநயநம் ஸ்த்ரீணாமாஹ பிதாமஹ: |
தஸ்மாத்கர்ப்பாஷ்டமே ஸ்ரேஷ்டே ஜந்மதோவாஷ்டவத்ஸரே ||

(பொ-ள்) ஸ்திரீகளுக்குவிவாகமே உபநயநமாகப் பிரமனால் சொல்லப்பட்டிருக்கின்றது. அனபடியினாலே ஸ்திரீகளுக்கு எட்டாவது அல்லது ஏழாவதுவயதைத்தான் விவாகத்துக்கு விசேஷகாலமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

உ-வது. தர்மங்களுக்கு அங்கமாய் ஏற்படும் அறிகுறிகள் யாவும் எவ்வித அந்தஸ்துள்ளவர்க்கும் சமானதருமமாயிருக்கவேண்டுமென்றும், அங்ஙனமில்லையாகில் அவ் வியவஸ்தையாதி அசந்தர்ப்பங்களால் அது நிலைபெறாதழியுமென்றும், அதனால் சமயஒழுக்கமும் ஐக்கியமத்தியமும் குன்றித்தருமத்தின் நிலை தாறுமாறாய்க் கெட்டலையுமென்றும், தருமத்தின் அடையாளம் சுலபமானதும்எந்தவிபத்தையும் சகிக்கக் கூடுமானதுமா யிருக்கவேண்டுவது ஆவசியகமென்றும், விசாரத்தே சுருதி ஸ்மிருதிகள் எதையும்விதிக்கும்.அதற்கொப்பாகவே ஸ்திரீகளுக்குச் சர்வமுக்கியமும் உபநயநஸ்தானமுமாகிய விவாக தருமத்துக்கு அறிகுறியாய்த் திருமங்கலியச் சரடு பருத்திநூலாகயிருக்கவேண்டுமென்று ஏற்பட்டிருக்கின்றது.

௩-வது. தருமத்தின்நிலை தாறுமாறாய்க்கெடும் என்பதற்குச் சாக்ஷி, தற்கால நவீன ஆசாரத்தாற்காணும் அநுபவமே போதும். எங்ஙனமெனில் தங்கக்கொடியில் தாலியைக்கோ

ர்த்துக் கட்டிக்கொண்ட சில ஸ்திரிகள், சமயம்வரும்போது அதை அடமானம்வைத்தும், இரவல்கொடுத்தும் பிறகு, தாங்கள் வெறுங்கழுத்தாக இருப்பதைப் பிரத்தியக்ஷமாய்க் காண்கின்றோமல்லவா ?

௬-வது. ஸ்திரீயானவள் பிதிர்குலத்தைவிட்டுப் பதியின் குலத்தை அடைந்து அதிற்றானே நன்றாகப் பந்தனஞ்செய்யப்பட்டாள் என்று விவாகமந்திரத்திற் சொல்லப்பட்டிருப்பதை அநுசரித்து, பந்தனசாதனமாகிய நூல்கயிறே திருமங்கலியதாரணத்துக்குயோக்கியப்பட்டதென வுணர்ந்து,பருத்தி நூலைச் சாஸ்திரங்களி லெடுத்திருக்குமுண்மை இனிதுவெளிப்படுகின்றது. இத்தியாதி நியாயங்களால், திருமங்கலியச்சரடு பருத்திநூலாகத்தானிருக்கவேண்டுமென்று புத்திமான்களுக்கு விளங்காமற் போகாது.

திருமங்கலியத்தைச்சுவர்ணக்கொடியில் கோர்த்துக் கட்டியிருந்தாலும், அதற்குள், பட்டுச்சரடும் செலுத்தியிருக்கின்றபடியால் தற்கால ஆசாரம்;சாஸ்திரத்தையாவது,பாரம்பரிய ஆசாரத்தையாவது நிரத்தள்ளவில்லை; அன்றியும் சுவர்ணக்கொடியிற் கோர்த்துக்கட்டுவது கழுத்தில் ஓர்வித ஆபரணம் போலும்விளங்கி அழகுசெய்யும் என்றுசொல்லும் பக்ஷத்தில்,

௭-வது. இந்தப்பட்டுச்சரடுநியாயம் எதுபோலிருக்கிறதென்றால் மார்பில் பூணூல் இல்லாமல்வரும் பிராமணனொருவனைப்பார்த்து அவன் சிநேகிதனொருவன் உமதுமார்பிற் பூணூலில்லை, இதென்னகாரணம் என்றுவினவ், அதற்கந்த



உ

சிவமயம்.

ச்சிற்றம்பலம்.

சொரூபஞானதேசிகரால
அருளிச்செய்யப்பட்ட

# சொரூபசாரம்.




த்தட் ... பதிப்பு.

ம ... டாக்டர்

உ. வே. ... ர் நூல் நிலைய

அடையாறு, சென்னை-20.

சென்னை:
மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1916.

இதன்விலை அணா—௧.



சிவமயம்.

# சொரூபசாரம்.

ஆத்மஸ்வரூபவணக்கம்.

சிற்சொருபந்தானேசகசொருபமானவெலாந்
தற்சொருபசாரமாச்சாற்றவே-பொற்சொருப
மச்சுருவாம்போலவதுவதுவாய்த்தோற்றுமொரு
சொச்சொருபந்தானே துணை. (க)

## நூல்.

{ சசாதிவிசாதி சுகதபேதமின்மையின், அனை
த்துஞ்சித்தேயெனவஸ்துநிச்சயங்கூறல். }

பூதாதியைந்துபொறிபுலன்களெல்லாஞ்சித்
தேதாதியந்தமவையெல்லாஞ்சித்-தோதரிய
கற்பனையுஞ்சித்தனைத்துங்காண்பானுங்காட்சியுஞ்சித்
தற்பமும்வேறில்லாமையால். (உ)

இங்ஙனமனைத்துஞ் சித்தென்பதற்கு உத்தி
யுளதோவெனில், உளதெனக்கூறல்.

யுத்திவிகற்பத்தாற்பொருந்துசகபேதமெலாஞ்
சத்தியப்போற்றோன்றுவதுசாட்சியன்றோ-முத்திமு
சுத்தமசுத்தஞ்சராசரங்களுள்ளதில் [த்தற்
தத்தனையுஞ்சத்தாதலால். (ங)

அங்ஙனமனைத்துஞ்சத்தானால், அவைகள் சச்சிதானந்த மாகியதனதுசொரூபமாகத்தோற்றுகின்றன வாவெனில், அவ்வாறே தோற்றுகின் றனவெனக்கூறல்.

பார்த்ததிசையெல்லாம்பரிபூரணசொரூபந்
தீர்த்தமெல்லாமானந்தசிற்சொரூபங்-கீர்த்திக்குந்
தோத்திரங்களெல்லாஞ்சுகசொரூபநம்மையல்லால்
வேற்றுருவமேதாகுமே. (௪)

இக்கூற்றுவசனமாத்திரமா அனுபவமுண்டா வெனில், அனுபவமுண்டெனல்.

அய்யாசகத்தோற்றமாதாரமெல்லாநீ
பொய்யாதுசோதியெனப்போதித்தான்-மெய்யாக
வுற்றுணரினென்றுரையாரொருவரிலை
முற்றுணர்வானானேமுதல். (௫)

இவ்வனுபவமாகத் தன்னைத்தரிசித்த தெது, அஃதெப்போதுதித்ததெனில், இவ்வனு பவமென்றுமுளதெனவுந்தானே தரிசித்தவனெனவுங்கூறல்.

நம்மையறிவிலவடிவாநாங்கண்டோநம்மையன்றிச்
செம்மையுலகத்தினிற்காணேம்-நம்மைநா
மூற்றுப்பாராதிருந்தோமல்லாலொருகாலு
மேற்றுப்போனோமோவியாம். (௬)

தானேயனைத்துமாயின்,நாமம்பலவாவானேனெனில்,
அதனாற்றான்வேறாகா வெனக்கூறல்.

எல்லாருநானாவிருந்துரைப்பாராகி றமை
பல்லாமலீசனளவுமலர்-சொல்லாலே
பெற்றமகன்றம்பிப்பிதாப்பேருரைத்தொருவற்
குற்றவுடல்வேறாகுமோ. (௭)

அங்ஙனமாயின்,அறிபவனு மறிபொருளும்வே
றாமேயெனில்,ஆகாவெனக்கூறல்.

நாமாயிருந்தோமுநாமேநாமல்லவாய்ப்
போமாறுபோகும்பொருளுநாம்-யாமத்துத்
தானேயுறங்கிச்சகத்துருவாய்த்தோற்றிவிழித்
தானேயவன்போலத்தான். (௮)

இங்ஙன மனைத்துமாய் விளங்கிய வாத்மாவின்
சுபாவஸ்வரூபம் யாதெனில், தானே
தானாய்விளங்குதலெனக்கூறல்.

ஆகமாயாருயிராயஞ்ஞானமாய்ஞானப்
போகமாயின்பப்பொருளாகி-யேகமாஞ்
சிற்சொரூபமாகியெல்லாச்செய்கையுமாநம்முடைய
கற்சொரூபமேதான தால். (௯)

இங்ஙனந்தானாகவிளங்கிய வாத்மாவிற் கோருண்மை
நாமங்கூறக்கூடுமோவெனில்,அஃதநீதானுபவ
மாதலிற்கூறக்கூடாதெனக்கூறல்.

ஆனந்தமென்பாரதீதமென்பார்நான்மறைக்குந்
தானந்தமாஞ்சருவசாட்சியென்பார்-ஞானநூல்

சொன்னகுறியெல்லாந்தொடாததென்வடிவுக்
கென்னகுறிசொல்லுவேன்யான். (௧௦)

இக்ஙனமதீதமாயின் விசாரணைக்கிடமின்மையின் அதற்சொரடையாளக்கூறல்வேண்டுமெனில், எல்லாமாயல்லவுமாயிருந்தலின் நிர்வசனமாமெனக்கூறல்.

நானேவதுவோவதுநானேநானதுவோ
ஞானேயமோநாதாந்தமோ-மோனமோ
சுத்தமோசூனியமோ தோற்றுஞ்சுபாவமிலை
யித்தனையுமல்லவாமே. (௧௧)

இங்ஙனமெனிர்வசனமாகக்கூறின், ஆத்மாவையறிய வருமிலதாம்; அந்தஞானம் பரிபாலனமுமாகா தாம்; ஆதலினதற்கோர்நாமங்கூறல்வேண்டு மெனில், சுருதிகளியம்பித்தநாமங் களைக்கூறல்.

புத்தோகமுத்தோகம்பூரணனந்தோகஞ்
சத்தோகஞ்சித்தோகஞ்சாந்தோகஞ்-சத்தோக
மாரணங்கடேரியவர்போதகஞ்சகல
காரணமாஞ்சைதன்யோகம். (௧௨)

இந்நாமங்களனுபவமாமோவெனில், அநுபவமுமாயாதீதமுமாமெனக்கூறல்.

சொல்லாச்சுவானுபவாதீதச்சுகானந்த
மெல்லாமுநானாயிருந்தோமே-தொல்லைவினை

யற்றோமெனச்சொலவுமற்றோமேநம்மைநாம்
பெற்றோம்பிறைமுத்தோம்பினாய். (கங)

இவ்வனுபவத்திற்பயன் யாதெனின்,
முத்தியுலகிற்கரசராதுமென்னக்கூறல்.

சந்ததமுநீங்காத்தனியராகப்பெற்றோமே
தொந்தச்சுகாசுகமுஞ்சுட்டோமே-யிந்தனையை
வாட்டியதேகாதிவனவாசம்விட்டோமே
வீட்டிற்குடிபுகுந்தோமே. (கச)

இவ்வரசன்றன்னரசிலெந்தவிதத்தும்
பார்த்திருப்பானெனில், அவன்றாந்
திரியாடனங்களையெனக்கூறல்.

கனவிற்றசேந்திரியநாட்டியங்கள்பார்ப்போங்
கனவின்மனக்கூத்துங்காண்போ-நினைவிற்
சுழுத்தியிலேயில்லாதசூனியக்கூத்தாடி
விழுப்பொருளாய்நாமிருப்போமே. (கரு)

சுகதுக்கங்களைநானென்றிருந்தபோதிவ்வனுபவ
மெப்படியெனில், அப்போது நாமேயிருந்ததே
யன்றி வேறொன்றின்றெனக்கூறல்.

நானென்றிருந்தவனோர்நான்கண்டேனிலவ
னானென்றுருத்தரிக்கவொட்டேனே-ஞான
வடிவானநானேநான்மற்றுளநானெல்லாம்
அடிவாளிறந்துபிறப்பான். (கசு)

நிர்விகாரியானவிவ்வாத்மா விகரிக்கிற் பந்தப்ப
டாதோவெனில்,சூரியனைப்போலச் சாட்சியா
யிருந்தலிற்படாதெனக்கூறல்.

சாயையெனவாழ்குடும்பந்தன்னைச்சமைந்தாலு
மாயையெனுமேகமறைந்தாலும்-தூயவொளி
தானாய்விளங்கிச்சகசாட்சியாயிருக்கு
ஞானாதித்தன்றானேநாம். (௧௭)

ஆதித்தனைப்போல வியன்தொழிற்படாமலிருக்க
வில்லையேயெனில்,இவனுந் தொழிற் படாமலி
ருக்கின்றானெனக்கூறல்.

ஏதேதுவந்தாலுமேதேதுசெய்தாலு
மேதேதின்புற்றிருந்தாலும்-யேதேதுந்
தானாகாவண்ணந்தனியேதெரிந்திருக்கு
ஞானாகாரந்தானேநாம். (௧௮)

ஆத்மாவசைப்பிக்கச்சகலமுமசைதலின்,அதற்கும்
பந்தமுளதேயெனில்,பம்பரமாட்டுஞ்சாட்
டியைப்போலதற்கும்பந்தமின்றெனக்கூறல்.

ஆட்டிவிட்டபம்பரம்போலாசைமுதலிக்கரணங்
கூட்டிமுடித்தாலுங்கூடாமே-சாட்டியதிற்
சம்பந்தமற்றோமேதற்சொரூபமானோமே
யெம்பந்தம்போனவாறே. (௧௯)

ஆறாவஞ்ஞானநீங்கிஞானம்வர்தவறியாதே
னில்,சுவானுபவத்தினின்றுதல்வருதல்
காணுமெனக்கூறல்.

அஞ்ஞானமெத்தாலழிந்ததோவாராயும்
விஞ்ஞானமெத்தால்விளைந்ததோ-மெய்ஞ்ஞானச்
செம்மையநுபூதித்தெளிவுபெற்றதேதுமே
வெம்மையல்லாலேதுநுகளை மெய்யாய். (௨௦)

ஞானம்வருதலுமஞ்ஞானம் [redacted] ரியாவிடின், அறி
ஞனென்பதெங்ஙனங்கூடு [redacted] காருளவுகூறல்
வேண்டுமெனின், மெய் [redacted] ாய்பொலவறி
விலறியாமைநீங்கி, அ [redacted] ொடுமொழியு
மாகாதும்ருப்பதே யறிஞனியல்
பெனக்கூறல்.

மெய்யெல்லாநாமாய்விளங்கியபின்னுமான
பொய்யெல்லாமெங்கேனும்போனதோ-மெய்பொய்
யிருவகைக்குநாமேயிடமானேந்தொந்தித்
திருவகைக்குமெட்டாமலே. (௨௧)

முன் தேகிநானெனவுந்தேகநானன்றெனவுங்கூறி,
இப்போதுதேகத்திற்குவேறுபட்டும் படாம
லுமிருப்பனெனவுங்கூறின் உண்மையா
தெனின், மாவித்தின் பருப்பைப்
போலக்கூடியுங் கூடாமலு
மிருத்தலே யுண்மை
எனக்கூறல்.

தேகிநாமென்றுமேசெல்வநமதென்றேமே
போகிநாமென்றுமேபொய்யன்றே-யாகமுதல்

இவ்வனுபவமெத்தன்மைத்தெனில், நினைவைச்
சுடாத்தெரிகின்றகூதிதமாய், அனைத்து
நாமாய்விளங்குமெனக்கூறல்.

வாக்கிறந்தபெட்டாமனத்திறந்தபெட்டாது
தேக்கிட்டானுந்தெவிட்டாத்தெள்ளமிர்த-நாக்கினீ
ரூறல்போலெய்ப்பேயுரியூமைக்குடம்போல்
வேறறநாமாயிருந்தோமே. (உ௯)

அனைத்துஞ்சிவமாயிருக்கவதுவாச வேண்டுமென்
பதேதெனில், ஏகமிரண்டென்னும்பேதநீங்
கிப்பூரணஞானமாயுறற்கெனக்கூறல்.

ஏதுசிவானந்தமோவேதுசிவாகாரமோ
வேதுசிவன்செயலோவென்றுந்த-மேதும்
பிரிவாகாவொன்றுகாப்பேதமாகாத
வறிவாநிறைவெயது. (௩௰)

அசத்தெனத்தள்ளுதல்யாது, சத்தெனக்கொள்ளு
தல்யாதெனில், அறிபொருளையசத்தெனநீக்கி,
அறிவைச்சத்தெனக்கொள்ளுதல்
சாந்தமாமெனக்கூறல்.

தானற[redacted]வங்களெல்லாந்தனக்கனியந்
தானது[redacted]ன்று தள்ளுங்கான்-ஞானமாய்த்
தள்ளும[redacted]குந்தன்னைற்றுமெனன்றுணர்ந்து
கொள்ளுமதுசாந்தமாகும். (௩௧)

சாந்தமேபொருளாயின் சாட்சியென்பதேதெனில்,
அதுவேசாட்சிமுதற்சுவானுபவானந்தமாய்ச்
சித்தநிலையானசிவமாமெனக்கூறல்.

சாந்தமேதற்சாட்சிதற்சாட்சியேபிரமம்
போந்தபிரமமேபூரணமா-மாய்ந்துணர்ந்த
சுத்தபரிபூரணமேதொல்முற்சுவானுபவஞ்
சித்தநிலைதானேசிவம். (௧௨)

சித்தமடங்கினாலும் மாயைநசித்தன்றோ சாயுச்சிய
மாகல்வேண்டுமெனின். சித்தநாசமேமாயாநாச
மாதலின் அஃதேசாயுச்சியமாமெனக்கூறல்.

சித்தப்பிறந்துசெகம்பிறந்துதானெனவோர்
கத்தன்பிறிந்தவழிகண்டோமே-சித்த
மடங்காமையேமாயையம்மாயையமாய்ப்பார்
இடந்தானேசாயுச்சியம். (௧௩)

இதுவேசாயுச்சியமானால் முன்செய்தகன்மமெங்
கேபோமெனின், இவ்வனுபவத்திற்
போனவிடந்தெரியாமற்போமெனக்கூறல்.

எல்லையற்றசென்மமெடுத்தோமிறந்தோமென்
றல்லலுற்ற பீதியழிந்தோமே-தொல்லுலக
மெல்லாங்கடுவெளியாயென்வடிவாமென்றன்வடி
வல்லாதுபொய்யாதலால். (௧௪)

இப்படிப்பட்டவனுபவிருக்கக்கன்மஞ்செய்வா
னேனெனின், இவ்வனுபவ முதியாத
போததனைச்செய்வதெனக்கூறல்.

காலஞ்சருகிக்கடவுளரைக்கைகூப்பிச்
சாலவிரதங்களெல்லாஞ்சாதித்தே-மேலுணர்வா
லீதெல்லாமாயமென்றெண்ணியானந்தானந்த
போதமாகாதபோது. (௧௫)

இவ்வனுபவம்யாவர்க்குறுமெனின், நித்தியமுதலிய
வற்றைப்பெற்றுச்சுத்தரானவர்க்குறு
மெனக்கூறல்.

நித்தியமாமேகமாய்ச்சின்மயமாய்ப்பூரணமாய்ச்
சத்தியமாகின்றொளிருந்தற்போதம்-சுத்தராய்ச்
சித்தியைப்பெற்றவராய்த்தீர்ந்தசெனனத்தவரா
யுத்தமராயுள்ளார்க்குறும். (௧௬)

இனிச்சுத்தர்க்கடையாளம்யாதெனின்
விண்டெனக்கூறல்.

வெட்டெனவும்பேசார்வெகுளார்முகங்கோணா
ரிட்டபதார்த்தம்பெரியோர்க்கேற்றுவைப்பார் - துட்
டர்களைச் - சேரார்யாவர்க்குந் தீங்குரையார் கண்
ணிழுக்கு, பாரார்பிறவிதீர்ப்பார். (௧௭)

(அதுவருமாறு.)

பொன்னும்பொருளைப்பொருளாகவும்போற்று
ரொன்றுநலந்தீங்கெடுத்துரையார்-சென்றசில

காரியத்தைநோக்கிக்கழியாரிழிவுசெய்யா
ராரியரேதாமாகுவார். (ஙஅ)

(இ-து.)

வேதவிதியைவெறுத்துரையாருள்ளவு
மோதலுருகலொழிந்திரார்-சாதன்
மறவார்கருத்திளகியன்னுலகில்லாஞ்சை
பிறவார்பிறவாதபேர். (ஙகூ)

(இ-து.)

சித்தசலனந்திடுக்கெனவுஞ்சற்றுமுறார்
முத்திவழிகேட்கவேமோகிப்பார்-புத்திபோய்
மாநிமலவீடுமனைமக்கள்செல்வமாச்சரியங்
கூடியழுந்தார்பக்குவர். (சo)

(இ-து.)

ஆர்க்குவருவிருந்தென்றுவணவும்போவனவுந்
தீர்க்கநிலையன்றுதெளிவரே-பார்க்குங்கால்
சாந்தராய்நித்தியராய்த்தத்துவபோதத்தவராய்த்
தீர்ந்தநிலைநின்றுசிலர். (சக)

(இ-து.)

சங்கற்பசாலச்சகத்தொற்றுரைவையெலா
மிங்கற்பமென்றறிழிவரே-பங்கமற
விட்டைமறுவையிரண்டுடைத்துயப்பாலுந்
தம்மையன்றிக்காணுதவர். (சஉ)

இவர்களுக்குச்சாஸ்திர வாசனையாவது அறிவறியாமை
வாசனையாவதுமறந்தும் வாராதோவெனின், அஃதுமோர்
வாசனையாதலின் வாராதெனக்கூறல்.

சத்தப்பிராந்திசகசத்நாம்ப்ராந்தியெலாஞ்
சித்தப்பிராந்தியென்றேதேறுவார்-முத்தர்தா
மாரோபமாகுமவத்தைதொறுந்தோற்றியழி
யாரோபம்பொய்யாதலால். (௨௩)

இங்ஙனமாயினிவர்க்கோர் தேவாராதனை
யாதெனில். தேகியைத் தரிசித்தலே
யெனக்கூறல்.

தேகாலயத்திற்சிதாகாசதேவதையை
வாகாயசாந்திமலராலே-யேகாந்த
மந்திரத்தாற்பூசைசெய்யாதவரையாதரித்துச்
சந்ததம்வாழ்வார்க்கார்சரி. (௨௪)

ஆனல்யாவருமிங்ஙனமேன் செய்யவில்லை
யெனில், அறியாமையாலெனக்கூறல்.

மூக்கனியும்பாற்சோறுமுன்பிருக்கநாயருந்திக்
கக்கியசோற்றைக்கருதுவா-ரக்கலைக்கு
மெல்லாப்பொருட்குமிருப்பொருளாமென்னுமல்
வல்லார்க்கடிமைபுகுவார். (௨௫)

மற்றான்களை அமைதிப்பார் என்னகதி
யடைவாரென்பது.

செம்மையறியார்செகத்தோற்றரவறியார்
தம்மையறியார்விளையுந்தாழ்வறியார்-தம்மிலே

யந்தராய்வீணேயவமதிப்பார்நல்லோரை
யெந்தவழிபோவாரிவர். (சசு)

பேரின்பத்தைச்சொல்லும் ஞானசாஸ்திர
மன்றியேனைய நூலுண்மையாகா
தோவெனில், ஆகாதெனக் கூறல்.

ஐங்கணையும்பூவாமறுகாலவிநாணு
மென்கரும்பாம்வில்லனங்கன்வீரனும்-வன்காத
லேற்றுவனுமெல்லாம்பொய்யிப்படியேபாரூலகத்
தோற்றமெலாமெய்தானுசொல். (சஎ)

ஆறைற் காலமுதலியவை பொய்யோவெனில்,
ஒன்றிலுஞ் சார்பில்லாதவிவர்க்குப்
பொய்யே யாமெனக்கூறல்.

காலமோதேவதையோகன்மமோமாமாயைச்
சீலமோவிம்மனத்தின்செய்கையோ-கோலியநல்
லுச்சாகமோநலந்தீங்குத்தரிப்பதேதநிலே
யெச்சார்புமில்லாவிவர்க்கு. (சஅ)

அவைகள் சரீரத்தைக் குறித்தாவது
வேண்டாவோவெனில், சரீரமன்னியமா
தலின் வேண்டாவெனக்கூறல்.

தன்னைத்தான்றேடாச்சதிகாரரேன்பிறந்தா
ரன்னைத்தால்வந்தவுடலார்தாமார்-முன்னம்
விடுத்தவுடலெத்தனையோமீண்டுமீண்டின்பா
லெடுத்தவுடனூறாயிரம். (சகூ)

ஆருள்யாவருமாபாசர் கடாமோவெனின்,
ஆசிரிய ரறிவிக்காதவிடத் தறிவின்மை
யின். ஆபாசரே யாமெனக்கூறல்.

பொய்யாக்கப்பொய்யைப் பொருளைப்பொருளாக்க
மெய்யாக்குருவொருத்தன் வேண்டிற்றேயையயோகோ
பூபாலராகிப் பொலிக்கிருசிவன்களெல்லா
மாபாசரென்பதுவேயாம். (௫௦)

இவர்களையாபாசரென்றால், ஏகமாகப்பிரமம்
இங்ஙனம்பேதமாகத் தோற்றுவானேனென்னில்,
ஒன்றாகப் பாராதவர்க்கிப்படித்தோற்று
கின்றதெனக்கூறல்.

ஒன்றிலே தோற்றுமலைப்பிரதிவிம்ப
மொன்றுபோற்றோற்றுதலுண்மையன்றே - வென்
பொருளாகப்பாராதபுன்மையறிவோர்க்கே [றும்
மருளார்பொறிபோலவாம். (௫௧)

இங்ஙனமொன்றாயிருக்கவதைத் தரிசியாததற்குக்
காரணம்யாதெனில், தானாயிருக்கின்றதன்னைக்
காணாமைக்கேதுயாமறிகிலோமெனக்கூறல்.

தன்னையறியாமற்றானே தனைத்தேட
லென்னபுதுமையிதையென்சொல்வேன் - மன்றவ
றன்னனீரினின்றுகொண்டு தாகந்தணியார்போ [கிற்
லென்னனீர்மற்றேதுரைப்போய்யாம். (௫௨)

தன்னைத்தரிசிக்கும்மார்க்கம் யாதெனில்,சாஸ்திர
விசாரத்தின்சாரமான தன்னில் அசைவறச்சும்
மாயிருத்தலே யாமெனக்கூறல்.

சாத்திரங்கள் கத்தித்தலைவீங்குவீர் குலமுங்
கோத்திரமுங்கொண்டுவினை கூட்டுவீர்-சாத்திகரா
யும்மாலேயும்மையுணர்ந்தோயாத்தொழில்விட்டுச்
சும்மாவிருக்கொணாதோ. (ருக)

ஆனாற்றேவபக்திஞானமாமாவெனில், பக்திசெய்பவ
னன்றிப்பக்தியாகாதெனக்கூறல்.

ஆசித்துத்தெய்வத்தடையாளமுங்கொளுத்திப்
பூசித்துக்கைகூப்பிப்போற்றுவீர்-நேசிக்குந்
தானேவதுவோசதிரானதெய்வமென்ன
ஊனேடுழல்வாருரூர். (ருச)

ஆனாற்றேர் திருவிழாவைத் தரிசிக்கவேண்டாவோ
வெனில்,அவற்றைத் தரிசிப்பவனைத்
தரிசிக்க வேண்டுமெனக்கூறல்.

தேரைத்திருநாளைச்சேவிப்பார்தம்மைவிட்டங்
காரைத்தொழப்போராரையகோ-தேரிடையே
யார்க்கின்றதெய்வம்பரிபூரணமலவோ
யார்க்குந்தெரியாததோ. (ருரு)

ஆனால் யோகநன்றோவெனில், அறிவையறிதற் கதுவேண்டுவதின்றெனக்கூறல்.

மூலக்கனலையிருத் தாழ்மூச்சடக்கிப்பேச்சடக்கிச்
சாலக்கனயோகஞ் சாதிப்பார் - மேலுணர்வு
கண்டருக்கச்சாதனையேன் காயத்தையேவலித்திங்
ஆண்டாருக்கவெண்ணமுறுகிறதோ. (௫௬)

ஆனால் துறவுநன்றோவெனில், அகம்பாவநீக்குவார்க்
குள்ள சுகம் துறவின்றாதலால் எங்ஙன
ஈன்றுமெனக்கூறல்.

கட்டப்படாமற் காயாத்திரத்தரிப்பார்
பட்டித்தொருகோவணமாவார் - சிட்டர்போற்
றூங்காமற்றூங்குஞ் சுகம்பெறுவாரே
யாங்காரநீக்குவாரானால். (௫௭)

ஆனால் சாஸ்திரமுஞ் சாதனமும் வேண்டாமோவெனில்,
அவற்றின் சாரமான தன்னைத்தரிசித்தவர்க்
கவைவேண்டாவெனக்கூறல்.

எச்சாத்திரம்வேண்டு மெச்சாதனைவேண்டும்
பிச்சாட்டல்லோவொடுவாய்ப் பேதையர்க்குப் - புச்சாண்
காட்டுவார்போலவறுங் கற்பனையேகாட்டி [டி
காட்டுவார் தம்மைக்காணார். (௫௮)

ஆனாற் சிவத்தையடையும் வழிதான்யாதெனில், அனைத்து
மாயையெனத்தள்ளித் தன்னைத்தரிசிப்பதே
யாமெனக் கூறல்.

சுத்தவுடமானசுக்கிலங்கொர்ப்பிகரித்துச்
சித்தத்துவங்கலந்த ஜீவித்துச்-சாத்தியப்போல்
வந்தபொருளெல்லாமாயையென்றேதற்சொரூபஞ்
சிந்தைசெய்வாரன்றோசிவம். (சாஉ)

அருள் திரிகாலங்களையுமுணர்ந்தவர் சிவமாகாரோ
வெனில், காலாதீதமானதன்னைத் தரிசிப்பவரே
சிவமாவாரன்றி, அவர்களாகாரெனக்கூறல்.

சேற்றின் றாமரையெனச்சயித்தராப்பகலை
மாற்றிச்சுயஞ்சோதியடிவாகி-யேற்றபடி
யென்றுமொருநாளாயிருக்குந்திருநாளைச்
சென்றுதொழுவாரேசிவம். (சாங)

ஞானநூன்முதலியவற்றைக் கைவிடல் நிர்வாணசுகமடைவ
தெங்ஙனமெனின், உபசாந்தியுண்டாய்த் தன்னிற்
கலையின்றிச்சுகிப்பதே முத்தியாதலின்
அவைகளாற் பயன்யாதெனக்கூறல்.

ஞானநூல்கற்றலுற்றுறவுபூண்டாலு
மோனசமாதிமுயன்றலும்-தானாகி
யெல்லாக்கவலையுமற்றின்புற்றிருப்பதுவே
சொல்லாருமுத்திச்சுகம் (சாச)

(இதுவுமது.)

மாகேள்விபெற்றாலுமாயோகமுற்றாலுந்
தேகேந்திரியந்திரிந்தாலு-மாகநுனைச்
சோரூபசாரந்தேறார்பெறார்பேறு
சோராதமுத்திச் சுகம். (௯௫)

அங்ஙனமாயின், பிராரத்வமாயினு மநுசரிக்க
வேண்டாமோ வெனில், காற்றாடிகாலைப்
போலத்தானசைவின்றிநிற்கின் அஃது தானே
சுழன்று நீங்குமெனக்கூறல்.

இச்சையநிச்சைபரவிச்சையோடுமூவும்
கொச்சைப்பிராரத்வக்கூறுகாண்-பிச்சைமுத
லேற்றாரிடொரிவரென்றுணர்ந்தோற்
காற்றாடிக்காலாகலாம். (௯௬)

ஆனாலிவ்வநுபவம் யாவர்க்கும் வாராதோ
வெனில், பகிர் முகமின்றி யகமுகமாயின்
யாவர்க்கும் வருமெனக்கூறல்.

என்னைநான்கண்டபடியிப்புவியிலெல்லோரும்
தன்னையேகாணத்தகுங்காணுஞ்-சொன்னே
னொளிநாட்டமோடுமனமுன்னோட்டம்பெற்று
வெளிநாட்டமாகாவிடின். (௯௭)

ஆனால் ஞானவான்களுக் கொரு கன்மமும் வேண்டாமோ வெனில், செய்பவனையுஞ் செயலையுங்கண்டு கொண்டிருத்தலால் அவர்க்கது வேண்டுவதின்றெனக்கூறல்.

கன்மந்தவறுமற்காலந்தவறுமற்
சென்மந்தவறுமற்செய்வரோ-கன்மவிதி
செய்வான்செயலிரண்டுஞ்சித்தத்தேகண்டுதெளிந்
துய்வார்பொருளாகுவார். (சஅ)

ஞானிகள் கன்மிகளைக் காணின் வெறுப்பரோவெனின், இந்திரஜாலத்தைக் காண்போ ரதனைப் பொய்யெனக்கண்டு மகிழ்வதுபோல மகிழ்வரேயன்றி, வெறுக்காரெனக்கூறல்.

உள்ளபடிகண்டுகளித்துற்றுருகமாட்டாத
கள்ளரையுங்கண்டுகளிப்பரே-கொள்ளையா
மிந்திரஜாலக்கமலமெத்தனைபுட்பித்தாலுஞ்
சந்திரனுக்குண்டோசலம். (சகூ)

இவ்வனுபவம்வந்த தெங்ஙனமெனில், ஆசிரியரருளினா லிவ்வனுபவந் தெய்வீகமாய்க்கிடைத்ததெனக்கூறல்.

தீங்கடர்ந்துமேன்மேற்செனித்தகருவேலடியின்
மாங்கனிவந்துற்றதொப்பவாய்த்ததே-ஆங்காங்கு

மெல்லாருந்தேடுபொருள்யாமாகவேயருள
வல்லான்றிருத்தாண்மலர். (எ0)

ஆறுலிவ் வனுபவங் கிடைப்பதித்தனை
யருமையோ வெனின், மிகவு மருமை
யாமெனக்கூறல்.

நானாயிருந்ததெங்கேநானபிமானித்ததெங்கே
வானுளமண்ணுளவாஞ்சையெங்கே-ஞானகுரு
தேசிகனாரெங்கேசிவசிவாமூர்த்தியெங்கே
பேசிடவாயெங்கேபிளாய். (எக)

இவ்வனுபவத்தாற் பெற்றபேறு யாதெனில்,
சிந்தனாதீதமான தன்னைப்பெறுதலே
யெனக்கூறல்.

என்னையேயல்லாமல்யான்பெற்றதேதுமில்லை [றிப்
யென்னையான் பெற்றிருந்ததெப்போது-மென்னையன்
பந்தமில்லைவீடுமில்லைபார்க்கிலிவையாராயுஞ்
சிந்தனையுமில்லாததே. (எஉ)

இவ்வவசரத்தில் யாரைத்துதிக்க வேண்டுமெனில்,
தன்மயமாக வாசிரியர் முதலிய
மூன்றினையுந் துதிக்கவேண்டு
மெனக்கூறல்.

செப்படிபோற்காட்டியருடேசிகனையோவனைத்து
மிப்படிசோதித்துணர்ந்தவென்னையோ-மைப்படியுஞ்

சென்மமுடிவாகவந்ததேகாலயத்தினையோ
வென்மயமாய்ப்போற்றுவேன்யான். (எ௩)

ஸ்தூலதேக வாசனையைத் தள்ளுவதெங்ஙனமெனில்,
அன்னமயமெனக் கண்டதனைத்தள்ளல்
வேண்டுமெனக்கூறல்.

அன்னமயகோசமாமாகமேயுள்ளளவு
சொன்னபடிகேட்கிற்சுகமடைவா-யென்றனை
கெட்டபாழ்வாசனையைக்கிட்டாதேயாதேனு
மிட்டபடிகண்டேயிரு. (எ௪)

இந்திரியங்களைக் களைவதெங்ஙனமெனில்,
அவற்றைத் தன்மயமாகக்கண்டுகளைய
வேண்டுமெனக் கூறல்.

பொறிகாளெனைநெடுநாட்போற்றிவளர்த்தீரே
யறிவானந்தப்பொருளானேன்-பிறிவாகு
மூங்களையுநானுவுணர்ந்துகொண்டேனீங்களினி
யிங்கழியாதொன்றாயிரீர். (எரு)

ஆசையைநீக்குத லெங்ஙன மெனில்,
தற்றரிசனவிச்சையால் நீக்கவேண்டு
மெனக்கூறல்.

ஆசையேயுன்றலைந்துவிட்டேனென்றாலு
நீசெய்யுபகாரத்தினின்றேனே-தேசிகனை

யுன்றலடைந்தேனுனைக்கூடி முத்தியினு
மென்றுணை நானுயினேன். (௭௬)

கோபத்தைக் கெடுத்த லெங்ஙனமெனின்,
உபசாந்தத்தா லெனக்கூறல்.

கோபமேயுன்றற்குறைதீர்ந்தேனீயெழும்பித்
தாபமேசெய்யுஞ்சலிப்பாலே-யாபத்து
நீங்கியுபசாந்தியிலேநின்றேன்கனவிலுநீ
யேங்கியெழும்பாதேயிரு. (௭௭)

உலோபத்தைப் போக்குவ தெங்ஙனமெனில்,
தன்னிலமைந்திருத்தலா
லெனக்கூறல்.

லோபமேயுன்னையுறவுகொண்டேனுன்னுருவம்
பாவமேயென்பருண்மைபற்றுவார்-நீபெருக
வார்ச்சிக்கவேபடுவாயாபாவியுன்றலே
யார்ச்சிக்கப்பட்டேனமைவு. (௭௮)

மனதைக்கரைப்பதெங்ஙனமெனின், அதற்காதா
ரமானவாத்மாவிற் கரைக்கவேண்டு
மெனக்கூறல்.

நெஞ்சகமேநானேநீயேநானென்றிருந்தும்
வஞ்சகமாவென்னைமறந்தனையே-தஞ்ச

முனக்குநானென்பதுவுமுண்மையேயுண்மை
யெனக்குநீவேறுயிராய். (எகூ)

இதுவுமது.

ஓடித்திரிந்தாயுழைத்தாய்பிழைத்தவழி
தேடிப்பலகலையுஞ்சிந்தித்தாய்-நாடியொரு
சற்குருவைத்தந்தாயென்சிந்தாய்தயவுசெய்த
நிற்குதவியென்செய்கேனே. (அ௦)

இதுவுமது.

உன்னுருவாய்நானிருந்தவுண்மைபோலென்மனமே
யென்னுருவாய்நீவந்திசைந்தாயே-செய்நன்றி
பாராட்டுவாருனைப்போலுண்டோபரமபதச்
சீராட்டின்மாறுதிரு. (அக)

இதுவுமது.

ஆசைவர்க்கமெல்லாமகற்றிப்பொறைமுதலாந்
தாசவர்க்கஞ்செய்யநலந்தந்தனையே-நேசத்தா
லாதிகாலந்தொடுத்தென்னன்புவிடாநெஞ்சேநன்
னீதியாலென்போலநில். (அஉ)

இவற்றுள்மனமடங்குமோவெனின், அனுபவத்
திலசையாமனிறுத்த, அஃதததனுலறிவாக
விளங்கிநிற்குமெனக்கூறல்.

என்னெஞ்சமுருலவயானுமதுபோலிருந்து
வின்னஞ்சமமாகாவிட்டேனே-யென்னெஞ்ச

மென்போலசையா திருக்கவதுபோல்யானும்
பொன்போலிருந்தேன் பொலிந்து. (அ௩)

இவ்வனுபவத்தில்விருப்புவெறுப்பில்லையோ
வெனில், அனைத்துந்தானாயிருத்தலின் இவையின்
றெனக்கூறல்.

ஏதுவரவேண்டுமதுவருகவென்னைவிடுத்
தேதகலவேண்டுமதுவகல்க-கோதென்று
பிச்சையுந்தள்ளேன்பிரயபதமும்வேண்டே
னெச்செயலுநானாகினேன். (அச)

இவ்வனுபவி தெய்வத்தைத் தொழுவானோ
வெனின், யாவுந்தன்னுருவமாகக்கண்டு
வணங்குதலன்றி, வேறு வணக்க
மின்றெனக்கூறல்.

எங்கேநான்போற்றுவதுமென்னையேதேவதையென்
றெங்கேதொழுவதுநானென்னையே-யெங்கே
யிருந்துகிடந்தோடுவதுமென்னிடத்தேநானே
யருந்துவதுங்கொள்வானுமாம். (அ௫)

அறிஞர்க்கெல்லா மிவ்வனுபவந் தானேவெனின்,
இச் சுவானுபவத்தைத்தவிர வேறொன்
றின்றெனக்கூறல்.

தன்னிடத்திலேதோற்றித்தன்னிடத்திலேயிருந்து
தன்னிடத்தேகூடுஞ்சகத்தெல்லாந்-தன்னைவிட

வேறன்றெனக்காண்பரல்லாலிவ்வீடுபெற்றோர்
மாறென்றுகாண்பரோமற்று. (அசு)

ஆனாலிவர்களிடத்து ராகத்துவேஷமுண்டா
மோவெனில், அனைத்துந் தாமாயிருப்பவ
ராதலின் அவர்களிடத்தவை யுண்டா
காவெனக்கூறல்.

ஏதுக்காசைப்படுவரேதுக்ககங்கரிப்பா
ரேதுக்குமாச்சரியமெய்துவா-ரேதுக்குந்
தாமேசராசரமாய்த்தானுவாயேழ்புவிக்கு
மாமேருவொத்துவாழ்வார். (அஎ)

ஆனாலிவ்வனுபவந்தவறுதோவெனில், ஈஸ்வர
சிருஷ்டிகள்பேதித்தாலு மிதுபேதியா
தெனக்கூறல்.

மாதிக்குமாறிமதிகருகித்தீகுளிர்ந்திவ்
வாதித்தன்றெற்குவடக்காலுஞ்-சோதித்து
முன்னிலைமையாராய்ந்தமுத்தரேயெஞ்ஞான்றுந்
தன்னிலைமைகுன்றுதவர். (அஅ)

இவ்வனுபவிகளையறிகின்ற தெங்ஙனமெனின்,
நலந்தீங்குகளிற்சலியாதிருப்பதேகுறி
யாகக்கொண்டறிதல்வேண்டு
மெனக்கூறல்.

பிச்சைமுதலாய்ப்பிரமபதமீறாக
விச்சைவரினுமிசைந்தாலுஞ்-சொச்ச
நலங்காதார்தாமதுவாய் நாடாதார்சித்தங்
கலங்காதாரேஞானிகாண். (அ௯)

ஆனவிவர் துதி நிந்தைகளை யெண்ணு
ரோவெனில்,எண்ணாரெனக்கூறல்.

வந்தித்துரைப்பார்வழிபடினும்வன்கணர்
நிந்தித்துரைத்தாலுநெஞ்சுறார்-சிந்தையற்று
மேகாடவிவரினும்வெய்யோனுதித்தாலு
மாகாயம்போல்வாரவர். (௯0)

இவ்வனுபவிக்குணவுயாதெனின், நேரிட்
டதேயுணவாமெனக்கூறல்.

எங்கெந்தப்போகமெதிராகுமவ்வளவுக்
கந்தந்தப்போகமனுசரிப்பார்-பந்தமற்று
நீதித்தனிநிலையேநிற்பர்கிரணம்பரவு
மாதித்தன்போலேயவர். (௯க)

இவ்வனுபவியைக் காமாதிச் செருக்கு
தொடாததென்னெனின்,வாச
னைக்ஷயம்வந்தபடியால் அவை
வாராதெனக் கூறல்.

சித்துருவமாகிச்செகசாட்சிதாமான
முத்தரைக்காமாதிமூளியாவே-சித்தத்தி

விகற்பவாசனைகளெல்லாமெடுத்தருந்திச்
சங்கற்பமில்லாத தால். (௯௨)

இவ்வனுபவிக்குஸ்தல்முதலியவைகள்வேண்
டாவோவென்னில், அவர்களிருப்பிட்முதலி
யனவேயவைகளா மெனக்கூறல.

என்றும்பொதுவாயிருக்குமொருசீவன்முத்தர்
தங்குமிடந்தானேதலவாச-மங்கவர்கள்
பார்வையேதீர்த்தமவர்பாதாரவிந்தமலர்ச்
சேவையேசாயுச்சியம். (௯௩)

ஞானிகளின்செயல் யாதென்னின், மெத்
தென்றசொல் முதலியனவா
மெனக்கூறல்.

மெத்தென்றசொல்லும்விருப்பமற்றநோக்குமெலா
சத்தென்றநெஞ்சுந்தளர்நடையுஞ்-சித்தத் [ஞ்
தடங்காமகிழ்வுமனவாசம்பெறற்
றிடந்தானேஞானிசெயல். (௯௪)

அறிஞர்கள்சிந்தனையாதெனில், எல்லாந்தானு
கச்சிந்தித்திருப்பதே யெனக்கூறல்.

எல்லாவிடத்துமெய்மைக்கண்டோமெம்மிடத்தி
லெல்லாமுங்கண்டோமென்றேகமாய்க்-கல்லாமை
கற்றவனுபூதிகைகண்டார்மற்றேது
மற்றார்சீவன்முத்தராம் (௯௫)

அறிஞர்க்கு விதிநிஷேதம் யாதெனின், அவர்கள்
தொடுத்தது விதியும், விடுத்தது நிஷேத
முமாமெனக் கூறல்.

தானேகனாகியுபசாந்தனாய் நின்மலனாய்
வானேமுதற்றன் வடிவாகு-ஞானி
விடுந்ததொழிலெல்லாம் விலக்காகுமன்றே
னெடுத்ததொழிலாசாரமாம். (௬௬)

அறிஞர்க்காசாரம் பூசையாவையெனின், ஞானானு
சந்தானமுதலியவைகளாமெனக் கூறல்.

ஞானானுசந்தானஞானிக்குநீராட
லானுகந்தகோலஞ்சதாசார-மானமற
வாங்கிப்புசிப்பதுவேமாபூசைசஞ்சாரந்
தீங்கற்றசுத்தசமாதி. (௬௭)

அறிஞர்க்குச்செய்காரியந்தவிர்காரியம் வேண்டா
மோவெனில், சிவாகாரமாய்விளங்குகின்றவர்க்
கவையிலவாமெனக் கூறல்.

அண்டமெலாந்தானாயறிவுவடிவாகக்
கண்டபரானந்தசிவாகாரருக்குத்-தண்டித்துத்
தள்ளும்பொருளேது தள்ளாவிதிவழியே
கொள்ளும்பொருளெதுவாகும். (௬௮)

அறிஞர்நடையைநிந்திப்பவர்க்குக்கதியாதெ
னில், பவநரகமெனக் கூறல்.

பெற்றபேரின்பப்பெரியோர்சரித்திரத்தைக்
குற்றமென்னாநின்கொடியோர்கள்-பற்றறுக்

கோசாகாரப்புழுப்போற்கோடானுகோடிசென்ம
மாசார்வரென்றேமதி. (கூகூ)

அறிஞரைத் துதித்தவர்க்குப் பலம்யாதெனில்,
அத்துவித ஸ்வரூபமாதலெனக்கூறல்.

சித்தகிராகாரகின்மலானந்தமய
சுத்தபரிபூரணசொரூப-வத்துவித
மெல்லாமுந்தாமாயிருப்பார்கருணைபெற
வல்லாரவராகுவார். (க00)

ஞானிகளெப்படிவிளங்குவார்களெனில், சர்வ
மும் தாமாகிச் சர்வமன்றாகிவிளங்கு
வாரெனக் கூறல்.

உள்ளமற்றாருள்ளத்துறுபொருளற்றாருள்ளக்
கள்ளமற்றார்ஞானக்கரையற்றார்-தெள்ளமுதச்
சிற்பாமுமற்றார்சிவானுபவந்தானுமற்றார்
கற்பனையுமற்றார்கள்காண். (க0க)

இந்நூற்பயன் கூறல்.

பருவசாரத்தாற்பலிக்குமனுபூதிச்
சொருபசாரத்தின்சுவையை-யிருசெவியா
லுண்டிருக்கவல்லாருலகமெல்லாந்தாமாகக்
கண்டிருக்கவல்லார்கள் காண். (க0உ

# சொரூபசாரம் முற்றுப்பெற்றது.